

இலாஹி

ஆதிநபி யுல்லாவின் பேரில்



# அமுர்த ரஞ்சித

# அலங்கார கீர்த்தனை

இஃது

புத்தாநத்தம்

கா. முஹம்மது உசேன் லெப்பை சாயபு

அவர்கள் குமாரர்

கா. உ. முஹம்மது அப்துல் அஜீஸ்

லெப்பை சாயபு

அவர்களால் இயற்றப்பெற்று

திருச்சி, பாலக்கரை,

[illegible] பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

1934. [அணா 2.



## வேண்பா.

சீர்தங்கும் மக்கா செம்மலி றசூலில்லாவின்
பேற் தங்கும் காரணத்தை பேசவுமே
நேர் தங்கும் இப்புவியிற் செந்தமிழாலினிது கவி
இயம்புதர்க்கு ஒப்பில்லா திரையவா காப்பு.

## விருத்தம்.

ஆதியே அளிவில்லானே அஹது ஹதான நீயே
ஜோதியாய் துணியாமற்ரைவையும்
[துளங்கிட ஆளும் கோவே
மாதவம் பெற்ற மக்கா மன்னராம் அப்துல்லாவின்
நீதமே நபியுல்லாமேற் நிகள் வளர் சரிதை சொல்ல
சாதமான ரப்பே சார்ந்தவர்க்கு அருள் செய்வாயே.

---

## [மேரே மௌலா புலாலோ என்ற மெட்டு].

### பல்லவி.

நபியே நாயகமே நம்பினேன் தினமே
ஹபிபேஹ தம் அருள் செய்வீர் எக்காலமுமே.

### அனுபல்லவி.

ஆதியவன் திருத தூதரான நபி நாயகர்
ஆளந்தனில் புருகான் தன்னை அழைத்து வந்த தாயகர்
ஜோதி மாமதீனு நகர் அரசாண்டோர் நபியே நாயகமே.

சரணம்.

(1) உடும்பு ஒட்டகம் பேச வைத்த
உண்மை நிரைந்த காரணர்
உலகில் இஸ்லாம் தழைக்க வைத்த
ஊக்க மிகுந்த புண்ணியர்
தாஹா நன்னபியே
தாரும் நற் கெதியே (நபியே)

(2) குறைஷி குலத்தில் அவதரித்த
கோவே அப்துல்லா புத்திரர்
குணத்தில் மிகுந்த கத்தீஜா ஆயிஷா
கோதை இருவர்க்கும் நாயகர்
குல்லும் படைத்தோனின்
குதரத்தே நவமணியே. (நபியே)

(3) இல்முக்கு அழகிய புத்தாநத்தத்தில்
இருந்து வாழும் சீலனும்
இறை இடம் துவா கேட்க்கும்
அப்துல் அஜீஸ் என்போன் சிறு பாலனும்
இசைந்தான் இறையோனின் தூத
தங்களின் மேல் பதம். (நபியே)

---

## (சோம சுந்தரனே என்ற மெட்டு.)

வள்ளல் நாயகமே
வரம் தாரும் பாரும் காரும் எங்கள் வள்ளல் நாயகமே.

(1) மானிலம் புகழ் மக்கமா நன் நகர்
மாட்சிமை அப்துல்லாவின் சிறு மைந்தர்

மாதாமினார் பெற்ற மன்னரென் தாயகர்
மாய்கை யீகை யூகமே எங்கள்.(வள்ளல் நாயகமே)

(2) யீகையிர் சிறந்த எங்கள் நயினாரே
ஈமான் இஸ்லாம் பயிர் விளைத்தோரே
இறையவன் திருத் தூதரானோரே
இந்த வேளை வந்து காரும். (வள்ளல் நாயகமே)

(3) அருஷிலேறி இறையிடம் பேசிய
அருமை மஹமூதா என் துயா
அகற்றி வைத்தருள் செய்யும் தூய
தாளே வேளை ஏளை கருள் செய் எங்கள்.
(வள்ளள் நாயகமே)

(4) துரும்பாலொரு நாகந் தன்னை
துண்டிக்க செய்தீரே முன்னே
துன்பம் சஹிய பயல் தன்னை
துறிதமுடனே வந்து காரும். (வள்ளள் நாயகமே)

(5) காணில் மானுக்கு பிணையாய் நின்றீரே
காத்திமுல் அன்பியா வாக வந்தோரே
தேனொழுகும் மதீனா நகர் சிறந்தோரே
தீன்பயிற் விழைத்த நாதரே. (வள்ளள் நாயகமே)

(6) ஆதியவன் மகிழும் குண சீலரே
ஆதம் வழியினில் அமைந்த நாதரே
ஆவலாய் பாடும் அப்துல் அஜீஸ் பிணி
ஆற்றி கார்க்க சாற்றினேன் எங்கள் (வள்ளள்)

---

## (இன்னேரம் என்மேல் வாதா என்ற மெட்டு.)

இன்னும் இறக்கமில்லையா
யேழை மேலய்யா (இன்னும்)
இகபறமும் போற்றும் எங்கள் முகம்மதுவே (இன்னும்)

(1) மண்ணுதி மண்ணர் புகழும் மா மதீனாவில் வாழும்
மகிஉவுடன் அரசாளும் மண்ணர் திருபதத்தை
மறவேனே நறைகமள்வானே உம்மை நம்பினேன்
அயயா. (இன்னும்)

(2) ஆதியின் திருத்தூதருன அஹ்மதுவே
ஆலமெல்லாம் நிறைந்தாளு முஹம்மதுவே
ஆளவேணும் ஆதாறம் வேணும்
நல்ல அன்பர் புகளும் பூவே. (இன்னும்)

(3) ஆதீமுத் தொளிவானோர்
அண்ணல் அறசருனோர்
அப்துல் அஜீஸ் சுக்கருள் நற்புடனே
தந்தாள வருவீரே வறம் தருவீரே
எங்கும் வருசை முஸ்த்தப நூரே. (இன்னும்)

---

## (திருப்புகளெங்கும் முழங்கும் குகா) என்ற மெட்டு.

### பல்லவி.

திருமக்கம் வாழும் நபியே நாதா
தீரு ஒய்யாரு அலங்காரு மதீனு நகராண்டிடம்

## அனுபல்லவி

(திருமக்கம்)

ஹக்கன் ஒளிவாய் வந்த அண்ணல் அஹ்மதுவே

(திருமக்கம்)

## சரணம்.

(1) அன்பிர்ச் சிறந்தோரே
அருமை மஹமூதரே
அடியேன் படுங் கஷ்டம்
அகன்றிட அருள் தருவீர். (திருமக்கம்)

(2) மண்ணுதி மண்ணார் புகள்
மா மதீனு நகற் வாழ்
மந்திர கலிமா சொல்ல
சந்திற நஸீத்தீர். (திருமக்கம்)

(3) அல்லும் பகலும் பாடும்
அகமதீலுமை தேடும்
அப்துல் அஜீஸ நாடும்
அன்பாய்ப்புகளும் குருவே (திருமக்கம்)

---

[நான் சென்று கணிபரித்துக்கோண்டு என்ற மெட்டு.]

(1) அல்லா அருள் நிறைந்த நாதா எங்கள்
அண்ணல் அஹ்மதே பொற்பாதா
அருளோங்கும் அஹ்மதுவே நீதா
அடியேனை கார்த்து அருள் தாதா

அருளும் மஹமூதா அருமை நபி நாதா எங்கள்
அல்லா ஒருவனென்ற வேதா (அல்லா)

(2) மன்னர் மன்னர் புகழும் நாதா எங்கள்
மஹராஜ ரென்றும் நவ நீதா
மறைமானுக்குப் பிணையாய் நின்றீர்
மஹராஜன் மனமகிழச் செய்தீர்
மயில்வடி வாேணாரே மக்கத்தில் பிறந்தோரே பீபீ
மாதா கதீஜாவை மணந்தோரே (அல்லா)

(3) இஸ்லாத்தின் பயிர்விளைத்த நாதா
இருலோகம் புகழும் மலர் பாதா எங்கும்
இல்லை யுறைத்த உபகாரா
இருலோட அருளும் சிங்காரா
இன்பம் தரும் நாதா இணையற்றவன் தூதா
இறையோனின் ஒளிவே நவநீதா (அல்லா)

(4) பூமணம் தேனொழுகும் நித்தம்
பூமிதனில் சிறந்த புத்தாநத்தம்
பாலன் அப்துல் அஜீஸ் பாடும்
பாவலர்கள் யாவரும் கொண்டாடும்
பதத்திர் பிழை தீரும் படிக்கு அருள் தாரும்
பறமனொழிவே கண்ணால் பாரும் (அல்லா)

---

[பாண்டியன் ஈன்றமீனாக்ஷி என்ற மெட்டு].

பல்லவி.

ஆதியின் றாதே எனக்காரும் அடியேன்
மிடி தனைத் தீரும்

அனுபல்லவி.

நீதியாய் ஓதி உம்மைத் துதிக்க நித்தமும்
நெஞ்சில் தான் நினைக்க (ஆதியின்)

தொகையரு.

நினைத்து வெகு காலமதாய் உம்மை நாடி
நிலையரியா பையன் தங்கள் பதமே தேடி
வினைகள் பறந்தோடிடவே கவியைப்பாடி
விதிமறைசேர் கெதி தந்து நிதியளிப்பீர்.
அளிப்ப துங்கள் கடன்னையா அரியா சிருவன் நானையா
கலிதீர்த் தாழ்குவீர் மெய்யா கருணை கடைக்கண்
[பார் துய்யா (ஆதியின்)
துய்யமலர் தேனுண்டு ராகம் பாடும்
துருஸாக வண்டு இசை பெருகத்தேடும்
செய்யும் வினை கருமமெல்லாம் சிதரியோடும்
சீர்மதீனு மாநகரில் செழிக்க நாடும்
நாடு முத்தானமுதல் நீரே நல்லற சாக வந்தோரே
பாலன் அப்துல் அஜீஸ் என்போன் பகர்ந்தான்
[பாதுகார்ப்பீரே. (ஆதியின்)

---

## [செந்தமிழுலகினில் என்ற மெட்டு.]

(1) மக்க நகர் அப்துல்லாவின் மனைவி ஆமீனுறீன்ற
மன்னர் முஹம்மதுற் றசூல் அனுதினமும்
அருள் தந்தென்னை நீர் கார்த்தருள்
மருமலர் புகழ்ந்திடும் மதிமுகவாசரே
சேவடி தந்தென்னையாள் மஹ்மூதரே

திக்குத்திசையும் அலைந்து தங்களின் திரு
சேவடியதை நினைந்து (மக்கநகர்)

(2) ஆதிதன் திருத்தூதராகவே வந்துதித்த
அண்ணல் முஹம்மதுற் றசூல் அனுதினமும்
அருள்தந்தென்னை நீர் காத்தருள்
அரும்பெரும் புவிதனில் அனுதின முங்கள் பதம்
பெறவே எனக்கருள் செய்திடும் மஹ்மூதரே
ஆழ்வதும் நீறல்லவோ அனுதிமும்
ஆளக்கடனல்லவோ. (மக்கநகர்)

(3) பாவி இபுலீஸுதன் பாச வலைக்குள் சிக்கி
பாவியாகிடாமல் என்னை
பாதுகார்த்தருள் பச்சமுடன் நீர் ரெந்தன்னை
சிறுபாலன் அப்துல் அஜீஸ் பாடும் பதத்திர் பிழை
தீரும்படிக்கு யருள் செய்திடும் ஜெம்மலி றசூல்
அனுதினமும் சேவடி தந்தே என்னையாள் (மக்கநகர்)

---

**கற்பிற்சிறந்த எந்தன் கனியே என்ற மெட்டு].**

மக்கந்தனில் பிறந்த நாதா இறை தூதா மஹமூதா
[அருள் தாதா
மானிலம்புகழ்மதீ ளுநகர் சென்றீர்
மாட்சிமை துளங்க மறை புருகானைவிண்டீர்
மானுக்கு பிணையாக கானினில் நின்றீர்
மாதாமீனுர் பெற்ற பாலா செங்கோலா மறைமூலா
[அனுகூலா
ஆதியவன் மகிழும் அஹமதே நீரும்

ஆகிரத்தில் ஆளவே அண்டினேன் காரும்
ஆவளானேன் கனவில் அருள்மிக தாரும்
ஆலம்புகழும் எங்கள் நபியே ஆளுமித்தநியே அதிபதியே
[செழுமதியே
அருஷிலேறி இறைமுன் வசனித்த நாதரே
அருமை கத்தீஜா ஆயிஷாவை மணந்தோரே
அல்லும் பகலும் உம்மை அண்டினேன் நீதரே
அல்லாவின் அருளால் கண்பாரும் அருள்தாரும்
[பிணிதீரும் முகம்பாரும்
அடிமை அப்துல் அஜீஸ் ஆவலாய்ப் பாடினேன்
அருமைநின் பதத்தை அனுதினம் தேடினேன்
அடியேன் பிணி தீரவே ஆசையாய் நாடினேன்
அன்னல் முஹம்மதுற் றசூலே அருளாளே இந்தவேளை
[என்னை ஆளே

---

## [யாப்பஞ்சத்தன் என்ற மெட்டு]

பல்லவி.

நாயக நபியே வாரும்
நம்பினேன் அருள் இனித்தாரும் [நாயக

அனுபல்லவி.

வெம்பினேன் வினையைதீரும்
வேதாந்த கோவேகாரும் [நாயக

சரணம்.

(1) மாதவமான ஜோதி
மஹ்மூதரென்னும் நீதி

ஓதினேன் ஞானபோதி
உகந்தருள் தாரும் கியாதி. [நாயக

(2) ஆதி ஒளிவின் பின்மயிலே
ஆலம் நிறைந்ததுங்கச் செயலே
ஆதாறம் தாரும் இறசூலே
ஆளும் அடியேனை இவ்வேளை. [நாயக

(3) துரும்பாலொருநாகம் தன்னை
துண்டிக்கச் செய்தீர் முன்னை
துன்பம்சகியா பையல் தன்னை
துறையே வந்தாளுவீர் யென்னை [நாயக

(4) சிறமோர் 'சறணம் வைத்துப்பாடும்
சிரியேன் அஜீஸு கொண்டாடும்
வறம்தாருமே நிதம்தேடும்
வையகம்தனிலே உம்மை நாடும். [நாயக

---

## [ஆரேசைய்யா என்ற மெட்டு]

ஆதிதூதா ஆலம்புகளும் நீதா
அமறேர்புகழ் வேதா [ஆதி
அடியேன்துயர் தீர்த்தருள் நாதா
அனைவோர்க்கருளும் ஜெகப்போதா
அனுதினமும் துதிசெய்தேன்
அகமிறங்கி யாள்வீர் நீதா (ஆதி)

(1) மக்கம் வாழும் அப்துல்லாவினற் பாலா
மறை நான்கின் அனுகூலா

மங்கை கதிஜாவின்சுடர் மேலா
மகரார்ஜன் துயர்தீர் தெங்கள் கோலா
மஹ்ஷரினில் கார்த்திடவே
மனமிறங்கி ஆள்வீர் நீதா. (ஆதி)

(2) கானகத்தில் மானுக்குப்பிணையானீர்
காத்திமுல் அன்பியா நீர்
கசடன்துயர தீர்த்தருள்வீர்
கஷ்டத்தை தீர்த்தெனக்கருள் செய்வீர்
கருணையுடன் கார்த்தருள்வீர்
கற்தன் ஒளிவான நீதா. (ஆதி)

(3) சீர்திறந்த புத்தாநத்தம் வாழும்
சிரியேன் அஜிஸ் நாளும்
சிறந்தமேகக் குடை சூடி
செளுமலர் தாங்கள் பாதம் நாடி
சிந்தித்தேன் பந்தத்தால்
கந்தம்சேர் காசிமே. (ஆதி)

---

## [அம்பிகா உன்மகன் என்ற மெட்டு]

### பல்லவி.

நன்நபி நாயகமே
நம்பினேன் தாயகமே.
நன்பினோர்க்கருள் நிதியே
நாவலர்புகள் மதியே
வெம்பினேன் இத்தியே

(1) வேளை யேழையை நீர்காருமே
மக்கம் பிறந்த நாதா
மதீயை யழைத்த வேதா
ஹக்கனருள் பெற்றபோதா
(2) காரும் பாரும் தாரும் ஹாஷீமே
ஆதியருளாலுத்த
அஹ்மது முஹம்மதுவே
நீதிதரும் குறைஷீகுல
(3) நாதா நீதா பாதம் தாருமே.
ஆமீனா ஈன்றகோவே
ஆலம்புகள் முஹம்மதுவே
பூமிதனிலே யுதித்த
(4) பூவே கோவே அஹ்மதுவே.
பாவியகிடா பாலன்
பாற்பவர்களுக்கு தோழன்
பூவில் அஜிஸ் என்பவன்
(5) போற்றி யோற்றி சாற்றினே னும்மை.

---

[நாத சங்கீதபோன் மணி மண்டபம்].

(1) மக்கம் தனில்பிறந்த மஹ்மூதா
மன்னர் அப்துல்லாவின் பாலரே நீதா
ஹக்கன் திருத்தூதரே காறணநாதா
காத்திமுள் அன்பியாவே அருள்தாதா
மஹ்மூதா யா மஹ்மூதா
மானிலம் புகளும் எங்கள் மஹ்மூதா. (மக்கம்)

(2) ஆதியவன் மகிளும் அஹ்மதுவே
ஆதியிடம் மன்ருடியாள்வீர் பூவே
சோதிமதிஞவாழும் துய்யபொற்கோவே
ஜோதிமன்னரே யாமுஸ்த்தபாவே
ஆதியின்றாதே ஆதியின்றாதே
அகிலம்புகளும் எங்கள் ஆதியின்றாதே. (மக்கம்)

(3) துரும்பாலொரு நாகத்தை துண்டித்தோரே
துன்யம்சகியா பையல் தனையாள்வீரே
தொல்லுலகி லென்துன்பம் நீக்கிடுவீரே
தொகைகதிஜா மணவாளருனேரே
துறை நீதரே துறைநீதரே
துய்யவன் மகிளும்—எங்கள்—துறை நீதரே. (மக்கம்

(4) குறைஷீகுலத்தில் வந்த குருமணியே
குல்லும்படைத்தோன் திரு நவமணியே
குணத்தில் மிகுந்த எங்கள் முழுமதியே
குறைருதாள்குவீர் இத்ததியே
குணசீலா குணசீலா
கோமான் அவன்மகிளும் குணசீலா. (மக்கம்)

(5) அபுஜகீல் கூட்டமதை கருவருத்து
அகிலத்திலும் இஸ்லாம்பயிர் விளைத்து
அடியோர்களை யாளவந்த சித்து
அப்துல் அஜீஸையாள்வீர் அருமைமுத்து
அருள்ஞாணம் அருள்ஞாணம்
அடியேன் பிணிதீர்ந்திட அருள்ஞாணம். (மக்கம்)

---

[முஹ்ப்பத் கைருசே மேரி என்ற மெட்டு]

குதாவின் றூதரே மணியே
குலைந்தேன் கொடுமை தீர்பிணியே
அடிமை அலைகுரேன் ஓடி
அனுதினம் கவிகளைப்பாடி. (முதா)

(1) மங்கைகதிஜாவை மணந்தோரே
மஹ்ஷரில் கார்க்கும் நீதரே
தீங்களைத் தானழைத்தோரே
தீவினைத் தீர்த்தருள் வீரே. (குதா)

(2) என்கைகால் நடுக்கம் தீரவே
இறங்கியாளும் மெய்ப்பூவே
மங்கை ஆயிஷாவின் கோவே
மண்ணர் அப்துல்லாவின் மகவே. (குதா)

(3) கல்பின் கலக்கம் தீருமே
கருணைவைத்து பாருமே
சொல்லும் அஜிசைக் காருமே
சுடரூல் பிணியைத் தீருமே. (குதா)

---

[காணவேணும் காணவேணும் என்ற மெட்.]

(1) ஆதியின் திருத்தூதரே வாரும் தங்கள்
ஜோதியிறங்கியே றக்ஷித்தாளும் இந்த
அகிலம் எல்லாம் புகளும்
அண்ணல் முஹம்மதுற் றசூலே
அருளாலே (ஆதியின்)

(2) மக்கம்தனில் பிறந்த கோவே எங்கள்
மண்ணர் அஹ்மதெனும் பூவே இந்த
மானிலம் கானினில் சென்று
மானுக்குப் பிணையாய் நின்றவேதா
குருநாதா (ஆதியின்)
(3) படிமீது பாதம் தோயா பன்பர் மங்கை
பத்தினி ஆமினர் பெற்ற இன்பர் என்னை
பச்சமுடன் றெச்சிக்கவும்
மெச்சினேனே உச்சிதமாய்தானே
சொல்லுவேனே (ஆதியின்)
(4) அல்லும் பகலும் உமைதேரும் மனம்
அருமையாகவே துதிபாரும் சிறுவன்
அன்பன் அப்துல் அஜீஸ்
இன்பம் பெறவே நிதம்தாரும் துயர்தீரும் (ஆதியின்)

---

[அய்யா பழனிமலை வேலா என்ற மெட்டு]

(1) திருமக்கம் பிறந்த நபி அய்யா எங்கள்
மன்னர் முஹம்மதுவேதுய்யா
ஹக்கன்றூதரென்னும் மெய்யா
காப்பாற்றீ யாளுவீர் தர்மக்கையா. (திருமக்கம்)
(2) கானகத்தில் வேடுவனை கண்டீர் அவன்
காதலுடன் ஈமான் கொள்ள விண்டீர்
காட்டு மானுக்குப் பிணையாய் நின்றீர்
கலைகன்றுடன் கானகம் செல்லென்றீர் (திருமக்கம்)
(3) ஆதியின் திருத்தூதரே நபியே எந்த
அகிலம் புகழும் தர்மபதியே

ஜோதி மலர் பாதாரம் கதியே என்பின்
துணையாக வருவீரித்ததியே. (திருமக்கம்)

(4) நல்லஹிருவென்னும் பருவதம் தன்னிலே
நாகம் விஷமதை தீர்த்தீர் முன்னிலே
கஷ்டம் மஹ்ஷரின் வெப்பத்தினுளிலே
கறை சேர்க்கும் எங்கள் திரு அண்ணலே.
(திருமக்கம்)

(5) அல்லாஹ்வின் அருளால் கண்பாரும் பூவில்
அப்துல் அஜிஸை நிதம் காரும்
ஆதரித்தாளவே வாரும்
ஆண்டவன் அருளால் அருள் தாரும் (திருமக்கம்)

---

